*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 5, itaḻ 8*

*November 04, 1924*

Record no. 148

உ சிவமயம்

சென்னைப் பதிவு எண் ௧௫0௬. [illegible] தந்தி விலாசம்:— [illegible]

# தனவைசிய ஊழியன்

செவ்வாய்க்கிழமை தோறும் வெளி வருவது.

ஆசிரியன்:—ராய. சொக்கலிங்கன்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

[illegible]
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௫. காரைக்குடி ரக்தாக்ஷி௵ ஐப்பசி௴ ௧௧௨ (௪—௧௧—௧௯௨௪) இதழ் [illegible]

## கெடுவான் கேடு நினைப்பான்.

இஃதோர் பழைய சொற்றொடர். இச்சொற்றொடர் எல்லா மக்கள் வாயினின்றும் பிறக்கக் காண்கின்றோம். துன்பம்வந்துற்ற போழ்து கடவுளைநோக்கி வருந்தும் பலர்போல், இன்னோரன்ன உயர்ந்தசொற்றொடர்களையும் இடுக்கண் வந்த நாள்தான் பலர் எண்ணுகின்றனர். அப்பொழுதும் சொற்பொருளுணர்ந்து நடப்பாரிலர். "கெடுவான் கேடு நினைப்பான்" என்ற பழமொழியை, "கேடுநினைப்பான் கெடுவான்" என மொழிமாற்றிப் பொருள் கொள்தல் வேண்டும். பிறனுக்குக் கேடு நினைப்பவன் தான்கெட்டு விடுவான் என்பது இச்சொற்றொடர்ப் பொருள். இப்பொருளை மக்கள் நன்கு ஓர்ந்து சிந்தையிற் பதித்துச் செயலிற் காட்டுவாராகில் உலகில் ஒருவர்க்கொருவர் கேடு செய்தல் என்ற ஒன்று அறவே அகன்றுவிடுமன்றோ? அந்தோ! கேடு செய்யும் மக்கள் ஏன் இதனை உணர்கின்றாரில்லை? பழவினைப் பயனாற் போலும்!

மக்கள் கெடாதுயர்ச்சி பெறுதற்கு இவை அருமைத் திருமொழிகளன்றோ? பிறன் கேடு நினைந்து எவரும் தாங்கெட்டழிதல் வேண்டாம். உலகம் நலம்பெற்றுயரட்டும் என்ற கருணையினால் பண்டெழுந்த மொழித்தொடரல்லவா இது? இது தெரிந்தும் கேடு சூழ்தலை என்னென்பது!

இது விளையாட்டுக்கு மொழிந்ததல்ல; அச்சத்திற்கு மொழிந்ததல்ல; கேடுநினைப்பான் கெடுவான் என்பதற்கிலக்கியமாகப் பல்லோர் இருக்கின்றனர். பழம் புராணக் கதைகளை யெடுத்தால்—இதிகாசக் கதைகளை ஆராய்ந்தால், "கெட்டாரவரவரும் கேடு நினைந்தாரே," என்பது தெற்றெனப் புலப்படும். அவைகளை விரித்துக் கட்டுரையை நீட்டுதல் வேண்டாம். இன்று நாம் கண்கூடாகப் பலரைப் பார்க்கின்றோம். கேடு நினைந்தார் பல்லார் கெட்டழிந்து நங்கண்முன் திரிகின்றனர். கேடு நினைந்தார் எவரும் உயர்ச்சியுற நாம் கண்டோமில்லை. பெரும்பான்மையும் இந்தப்பிறப்பிலேயே அவர்கள் யாவும் அடைந்து விடுகின்றனர். பழைய நல்வினைத்தொடர் ஏதும்இருக்குமானால், சின்னாட்கள் சென்று அநுபவிக்கின்றனர். கேடு நினைக்கும் சிலர் கெட்டு வருவது பிறர்க்கு நன்றாக வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது. ஆனால் அவர்கள் தாங்கள் கெடுவதைக் கெடுமதியாற் சிறிதும் அறியாது, கேட்டையே தமக்கு ஆக்கமென எண்ணி மேலும் மேலும் கேடு சூழவே முந்துகின்றார். உண்மையில் இவர்களை நோக்கி நாம் பரிதாபப் படுகின்றோம். ஐயகோ! எல்லாம்வல்ல இறைவன் ஏன் இவர்கள் உள்ளம் புகுந்து இவர்களைக் கேடு நினைந்து கேட்டைவதினின்றும் நீக்குகின்றாரில்லை 'கெடுவான் கேடுநினைப்பான்" என்பதை உணர்த்துகின்றாரில்லை; பிறன்கேடு நினைந்து தாங்கள் கெட்டு வருவதைத் தெரியச் செய்கின்றாரில்லை; என்று நன்மக்கள் வருந்துகின்றார். நற்காலம் கிட்டாமையினாலேயே அவர்கள் கேட்டைந்தழிகின்றார்போலும்!

கேடு சூழும் ஒருவர்க்குப் பிறமக்கள் கேடு சூழாமலே அறக்கடவுள் கேடு சூழ்ந்து விடும் என்பதை "மறந்தும் பிறன் கேடு சூழற்க சூழின், அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு" என்னும் அருமைக் குறளால் விளக்குகின்றார் புலவர். எனவே மறந்தும் எவர்க்கும் கேடு சூழ்தல் ஆகாது; தனக்கு ஒருவன் கேடு சூழ்ந்தபோதினும், அவனுக்குப் பதிலுக்குக் கூடக் கேடு நினைத்தல் தகாது. சூழ்ந்தவனுக்குப் பலன் கொடுக்க அறக்கடவுள் காத்துக்கொண்டிருக்கிறது; அவ்வேலையில் நாம் இறங்குதல் வேண்டாம்; நாம் நமது கடமையைச் செய்யலாம்.

கேடு சூழ்வோரை—கேடுநினைப்பாரைத் திருத்தக்கூடுமானால் திருத்தலாம்; இன்றேல் அவர் வினைவழிதான் [illegible] ட்டும். "எனைப்பகையுற்றாரும் உய்வர் வினைப்பகை வீயாது பின் சென்றடும்" என்பதை வெல்ல எவராலும் முடியாது. "வினைப் பயனை வெல்லுதற்கு வேதமுதலாம் அனைத்தாய நூலெதுவுமில்லை" ஆகலின் வினையாலுழல்வோர்க்கு இரங்கவேண்டுவதைத்தவிர வேறு வழியின்று.

கேடு சூழ்வோர், பழவினைப்பயன் சூழல் வேண்டுவதாகலானும் என்று எண்ணிக்கொண்டு கேடு சூழ்தல் ஆகாது. அங்ஙனமே எண்ணிக் கொண்டு மக்கள் செயல் புரிய ஆரம்பித்து விடுவார்களானால், உலகம் கவிழ்ந்துவிடும். எல்லாத் தீயசெயல்களையும் புரிந்துகொண்டு "இது என் விதி; இது என் விதி" என்று சொல்லப்புகுந்தால் என்னாம்? சிலர் அப்படிச் சொல்லவும் கேட்கின்றோம். ஒவ்வொருவரும் நன்மை நாடி நல்லன செய்யவே முயலவேண்டும். அந்தோ! கேடு ஏன் நினைக்கின்றனர்? கேடுசெய்து வாழ்வுற்று நிலைபெற்றார் எவர்? நாம் ஒருவரையும் அங்ஙனம் கேட்டோமில்லையே!

எத்தனை காலம் மக்கள் இவ்வுலகில் வாழப்போகின்றனர்? சொற்ப நாட்களுக்குள் ஏன் அடாதன செய்து படாதபாடு படுகின்றனர்? இறுதியிற் பற்றித்தொடர்வது இருவினையாகிய பாப புண்ணியங்களேயன்றோ? கேவலம் இவ்வுடலின் பொருட்டே சில தீய காரியங்களைச் செய்து இவ்வுடலழிந்த பிறகு உயிரைத் தொடர்ந்து வரும் பாபத்திற்கு ஏன் இடங்கொடுக்கவேண்டும்? வேண்டாம்! வேண்டாம்!!

சகோதரர்களே!

"கெடுவான் கேடு நினைப்பான்" என்பது உறுதி! உறுதி!! ஆதலால் "இருப்பது பொய் போவது மெய்" என்பதை உணர்ந்து ஒருத்தருக்குந் தீங்கினை உன்னாதிருங்கள்! நல்லனபுரிந்து வாழுங்கள். "இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு" என்ற அருமைத் திருக்குறள் ஞாபகத்திலிருக்கட்டும்.

## மைசூரில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரமும் பள்ளிக்கூடமும்.

மைசூர்த் தசராப் பண்டிகையைப் பார்வையிட விஜயம் செய்திருந்த நாட்டுக்கோட்டைப் பிரபுக்களின் கூட்டமொன்று, அந்நகரில் அவ்விராஜ்ஜியத்துக்கு நாட்டுக்கோட்டையார் பிரதிநிதியாக அமர்ந்துள்ள, "மைசூர், ஸயாஜிராவ் வீதியிலுள்ள ஜவுளி வியாபாரியும் ரொக்க நாணய வியாபாரியுமான" ஸ்ரீமான் கதிரேசன் செட்டியாரவர்கள் வீட்டில் கூடிற்று; அன்று விஜய தசமி நாளாக இருந்தபடியால், ஸ்ரீமான் கதிரேசன்செட்டியாரவர்கள், பெருத்த செலவில், மிகுந்த விமரிசையாக ஸ்ரீராம பட்டாபிஷேக உத்ஸவத்தை நடத்தினார்கள். அங்கு, அன்று விஜயம் செய்திருந்த நாட்டுக் கோட்டைக் கனவான்களிற் பிரமுகர்கள் சிலரது பெயர்கள் பின்னே குறிக்கப்படுகின்றன.

### பிரமுகர்கள்.

ஸ்ரீமான்களான

- தீ. சொ. ராமன் செட்டியார்
- லெ. அரு. அருணாசலச் செட்டியார்
- ஆத. அ. சிவ. அண்ணாமலைச் செட்டியார்
- தீ. நா. முத்தையாச் செட்டியார்
- டி. எஸ். என். ஆர். சுப்பிரமணியச் செட்டியார்
- சா. ராம. மு. சித. ஜம்புலிங்கச் செட்டியார்
- தீ. அ. சொக்கலிங்கச் செட்டியார்
- ராம. ஆ. ராம. குன்றக்குடியான் செட்டியார்
- அ. நா. ராம. சுப்பிரமணியன் செட்டியார்
- மெ. செ. ச. மெய்யப்ப செட்டியார்
- நா. சு. மு. ஸ்ரீநிவாஸன் செட்டியார்
- சென்னை, அ. ழ. அரு. சுட லெக்ஷ்மணன் செட்டியார்

ஆகியவர்களும் மற்றவரும் விஜயம் செய்திருந்தார்கள்.

இன்னும் மைசூரிலுள்ள பிரதானர்களிற் சிலரும் விஜயம் செய்திருந்தார்கள்; அவர்களுள் ஸ்ரீமான்களான என். ஆர். கோவிந்தராவ் அவர்களும் எஸ். விட்டல்ராவ் அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள்

நடவடிக்கையின் ஆரம்பத்தில் மைசூர் வைணீக சிகாமணியான ஸ்ரீமான் வீணை. சேஷண்ணா அவர்கள் தமது பேரனாகிய ஒரு சிறுவனது வாய்ப் பாட்டுடனும் ஸ்ரீமான் டி. வெங்கடராமய்யரவர்களது மிருதங்கத்துடனும் தமது வீணைக் கச்சேரியை வாரம்பித்து, அவையோரைக் களிக்கச் செய்து நிறைவேற்றினார்கள். நாட்டுக் கோட்டை நகர வைசியர்கட்குப் பிரதிநிதியாக திரு. ஆத. அ. சிவ. அண்ணாமலைச் செட்டியாரவர்கள், எழுந்து மகாராஜா அவர்கள், தங்கள் பிரதிநிதியைக் கவுரவப்படுத்தினதற்காகவும் தங்கள் சமூகத்துப் பிரமுகர்களைத்தர்ப்பார்க் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டதற்காகவும்மகாராஜாவுக்கு நன்றியறிதலும் சந்தோஷ ஆரவாரங்கள் அளித்தார்கள். மற்றும், தர்ப்பாருக்கு வந்திருந்த சுமார் ரூ00-பேர் தொகையடங்கிய தங்கள் சமூகத்தார்க்கு இடமும்உணவும் வசதியாகக்கொடுத்து உபசரித்தமைக்கும், அன்றியும், ராஜ தர்ப்பாரில் தங்கள் சமூகத்தார் பிரவேசிக்கக் கூடிய சௌகரியங்களைத் தேடிக் கொடுத்தமைக்குமாக, ஸ்ரீமான் கதிரேசன் செட்டியாரவர்கட்கு மனமார்ந்த வந்தனமும் கூறினார்கள். பின்னும், அவர்கள், அகில இந்தியாவிலும் தர்மத்துக்குப் பேர்போன நாட்டுக் கோட்டை நகர வைசியர்கள், பழைமையானதும் பிரஸித்தி பெற்றதுமான இந்த மைசூரில், யாத்திரிகர்கட்கும் பொதுஜனங்கட்கும் உபயோகப்படக் கூடியபடி ஒரு சத்திரமும், தமிழ் தெலுங்கு கன்னடம் இங்கிலீஷ் முதலிய பாஷைகளைக் கற்பிக்கும் ஒரு நடுத்தரப் பள்ளிக்கூடமும் கட்டித் திறக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் பிரேரேபித்தார்கள்.

ஸ்ரீமான் என். ஆர். கோவிந்தராவ் அவர்களும் தீ. சொ. அவர்களும் சா. ராம. மு. சித. ஜம்புலிங்கம் செட்டியாரவர்களும் அந்தப் பிரேரேபணையை யாமோதித்துப் பேசினார்கள். அந்தத் தீர்மானம் எல்லோராலும் ஏகமனதாக அங்கீகரிக்கப் பெற்று, அதனை நிர்வஹித்து நடத்துதற்குரிய சபை யொன்றும் கூட்டப்பட்டது. அக்கூட்டத்திற்கு, ஸ்ரீமான்களான லெ. அரு. அருணாசலச் செட்டியாரவர்கள் தலைவராகவும் எம். எஸ். எம். கதிரேசன் செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும் தீ. சொ. ராமன் செட்டியா ரவர்கள் பொக்கிஷதாராகவும் தேர்ந் தெடுக்கப் பட்டார்கள்.

இந்தப் பெரிய காரியத்திற்காக உடனே அதேஇடத்தில் ஸ்ரீமான்களான தீ. சொ. ராமன் செட்டியார் அவர்கள் ௪000 ரூபாயும், லெ. அரு. அருணாசலச் செட்டியாரவர்கள் ௫00 ரூபாயும் உதவினார்கள்.

மங்களார்த்தி செய்து பிரசாத விநியோகம் செய்தான பிறகு ஸ்ரீமான்களான கதிரேசன் செட்டியா ரவர்கட்கும் அருணாசலச்செட்டியாரவர்கட்கும் வந்தனம் அளிக்கப்பட்டது.

நாட்டுக் கோட்டையார் தங்கள் தர்ம கைங்கரியத்தை மைசூர் ராஜ்ய அளவிலும் கொணர்ந்து உதவமுன் வந்தமைக்காகப் பொதுவாக அந்த சமூகத்தார்க்கும் சிறப்பாக எங்கள் நகர ஜவுளி வியாபாரியாகிய ஸ்ரீமான் எம்.எஸ்.எம். கதிரேசன் செட்டியா ரவர்கட்கும், மைசூர்ப் பொது ஜனங்களின் வந்தனம் உரியதாகும்.

இங்ஙனம்,

கே. நாராயணசாமி ஐயர்

(பெங்களூர் "உண்மை" யென்னும் பத்திரிகையின் ஆசிரியர்.)

உச—கo—உச.

---

## சென்னை நீதிமன்றம்.

### அவதூறு வழக்கின் அப்பீலைத் தள்ளி அபராதத் தண்டனை உறுதி செய்யப்பட்டது.

பலவான்குடி ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியார் தன்னை ஜாதிப்ரஷ்டம் செய்திருப்பதாய்ச் சிவராமன் செட்டியார் முதலான அறுவர் அவதூறு செய்தார்களென்று தேவகோட்டை சப்டிவிஷன் மாஜிஸ்திரேட்டில் தொடுத்த வழக்கில் சிவராமன் செட்டியார் முதலான அறுவரும் குற்றவாளிகளென்று தீர்மானித்து ரூ. ௰க-வீதம் விதித்த அபராதத் தண்டனையை இராமநாதபுரம் மேல் நீதிமன்றத்தில் (செஷன்ஸ் கோர்ட்டாரும்) உறுதி செய்ததின்மேல் சென்னை உயர்தர நீதி மன்றத்தில் (ஹை கோர்ட்டில்) அப்பீல் செய்து கொண்டார்கள்.

ஷை அப்பீல் உந-கo-உசல் நீதிபதி கிருஷ்ணன் அவர்கள் முன்பாக விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

அப்பீல்தார் தரப்பில் ஆஜரான ஸ்ரீமான் எதிராஜலுவும் ஸ்ரீமான் கிராண்டும் தங்கள் கக்ஷிக்காரர்கள்தான் பிரசுரம் செய்தார்களென ருசுவாகவில்லையென்றும், அவ்விதம் ருசுவாகியதாகவே வைத்துக்கொண்டாலும் கூட்டத்தில் நடந்தவற்றைத்தான் வெளியிட்டார்களென்றும் வாதித்தார்கள்.

இராமசாமிச் செட்டியாருக்காக ஆஜரான ஸ்ரீமான் டி. ஆர். இராமச்சந்திர ஐயரும் ஸ்ரீமான் எம். பதஞ்சலி சாஸ்திரியாரும் கீழ் மன்றத்தின் தீர்ப்பு நியாயமானதென்றும் அப்பீல்தார் சொல்லிக்கொள்ளுமாறு கூட்டம் நடந்திருந்தாலும் அது சரியான கூட்டமாகக் கருதத்தக்கது இல்லையென்றும் எதிர்வாதித்தார்கள்.

உச-கo-உசல் முடிவாக நீதிபதி கிருஷ்ணன் அவர்கள் கீழ்மன்றத் தீர்ப்பு சரியானதென்றும் அவதூறு செய்ததாக ருசுவாயிருப்பதால் அபராதத் தண்டனை உறுதி செய்யப்பட்டது என்றும் சொல்லி அப்பீலைத் தள்ளுபடி செய்தார்கள்.

ஒரு நிருபர்.



## வைசியநாட்டுச்செய்தி

### சிவநேச திருக்கூட்டம்.

இத்திருக்கூட்டத்தார் இரக்தாக்ஷி ஆடு ஐப்பசித் திங்கள் உஉம் நாள் வெள்ளிக் கிழமை பிற்பகல் ஒக்கூர் சென்று ஆலய வழிபாடும் உநம் நாள் சனிக்கிழமை உதயாதி நாழிகை எஇ முதல் கறி வரை உஉஇ முதல் நo வரை சைவப் பிரசங்கங்களும் செய்து அன்று பிரதோட புண்ணிய காலத்தில் ஆலய வழிபாடு செய்யவும் உறுதி கொண்டுள்ளார்கள்.

இம்மாதம் உசஉ இல்லங்களில் நடைபெறும் சுபம் கருதியும் கார்த்திகை மார்கழி மாதங்களில் திருக் கார்த்திகை திருவாதிரை விசேஷங்களைக் கருதியும் பிரதோடத்தின் முதல்நாளே வந்து கூட அன்பர்களின் விருப்பம் என்று திருக்கூட்ட ஊழியன், ராம. கு. ராம. இராமசாமி எழுதுகிறார்.

* * *

### கே. ப்பனூப்பட்டி. விவேகானந்த வாசகசாலையார் கவனிப்பார்களா?

வாசகசாலையின் விதிகளில் நிர்வாக சபை ஏற்படவில்லை. நிர்வாக சபையார் இருந்து எந்தக் காரியங்களையும் நிர்ணயித்தால் அதை அமுலுக்கு கொண்டுவரலாம். அஃதில்லாமல் எல்லா அதிகாரமும் தனிப்பட்ட நபர்கள் இஷ்டம்போல் நடத்திக்கொண்டு வருகின்றார்கள். அதனால் வீண் புரளிகளும் பலபேர் மனஸ்தாபங்களும் அயலூர் நண்பர்களுடைய குறைச் சொல்லும் ஏற்படுவதற்குக் காரணம் இருக்கிறது. இவ்வித நிலைமையோடு வாசகசாலை இருந்தால் செவ்வனே நடைபெறுமா வென்று ஐய முண்டாகின்றது. ஆகையால் வாசகசாலை அங்கத்தினர்கள் கூடி ஆலோசித்து நிருவாகக் கூட்ட மொன்று ஏற்படுத்துவார்களானால் மிக்க நலமாகவிருக்கும் என்று திருநாவுக்கரசு தெரிவிக்கின்றார்.

* * *

### கூழிபிறைச்சிவனடியார்திருக்கூட்டம்

இத்திருக் கூட்டத்தில் தலைவராக இருந்துவந்த ஸ்ரீமாந் ம. அ. கரு. ராம. இராமன் செட்டியாரும், உபதலைவர் வெ. கு. சொ. சொக்கலிங்கம் செட்டியாரும் தொழில்முறை விஷயமாக, அந்நியநாடு செல்வதால் பதிலாக ஸ்ரீமாந் மூ. பெரி. சித். இலக்ஷ்மணச் செட்டியாரைத் தலைவராகவும் ச. கரு. நாகப்ப செட்டியாரை உபதலைவராகவும் ஷை கா. நாகப்ப செட்டியார் நிர்வாக அங்கத்தினராக இருந்ததால் அவர்க்குப் பதிலாக ஸ்ரீமாந் ஆ. மு. ப. சொக்கலிங்கம் செட்டியாரையும் காளிது மாதம் ககஉ நடைபெற்ற மகா சபைக்கூட்டத்தில்தேர்ந்தெடுத்திருக்கின்றார்கள்.மேற்கண்ட இருநண்பர்களும் மலாய் நாட்டிலும் நமது திருக்கூட்டத்தின் முக்கிய நோக்கங்களைப் பரவச்செய்வார்களென நம்புகின்றோம். இதுவரை இத்திருக்கூட்டத்தில், பதவி வகித்து நடைபெறச் செய்துவந்த உழைப்பினுக்கு நாங்கள் பெரிதும் நன்றி பாராட்டுகின்றோம் என்று உப காரியதரிசி வீ. பெரி. பழ. சொக்கலிங்கம் செட்டியார் எழுதுகிறார்.

## இந்தியச் செய்தி.

தேச அபிசௌக்கியம் காரணமாக லாலா லஜபதிராய் அவர்கள் பஞ்சாப் மாகாணத் தேசியசபைக் கூட்டத்தின் தலைமைப் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார்.

* * *

ஸ்ரீமான் சுப்பிரமண்ய சிவம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு இனிமேல் ராஜத்வேஷமாகயாதும் பேசுவதில்லை யென்னும் உறுதிமொழியும் கொடுத்துவிட்டபடியால் அவர்மேல் தொடுக்கப்பட்டிருந்த வழக்கு வாபஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது.

* * *

மௌலானா முகம்மதலி அவர்களால் திறமையாக நடத்தப் பெற்றுவந்த "காம்ரேட்" (தோழன்) என்னும் ஆங்கில வாரப் பத்திரிகை சுமார் க-ஆண்டுகட்கு முன்நின்றுபோயிருந்தது; மறுபடியும் அவர்களே அப்பத்திரிகையை ஆரம்பித்திருக்கிறார்கள். அதற்கு நாம் நல்வரவு கூறுகிறோம்.

* * *

சீர்திருத்த விசாரணைக் கூட்டத்துக்கு முன் ஸர் அப்துல் ரஹீம் "இரட்டை யாட்சியையே இன்னும் சரியாகப் பரிசோதித்துச் சீர்திருத்தி யமைக்கலாமென்றும் ககூஉகூ-ம் ஆண்டு இந்தியாவுக்கு எவ்வித முன்னேற்றமும் வேண்டாமென்றும் சாட்சியம் கொடுத்திருக்கிறார். இதனால், இவரது முன்னைய மனோபலம் மாறிவிட்டதென்று தெரிகிறது.

* * *

சமீபத்தில் பெரிய புராண ஆராய்ச்சி யென்னும் அரியதொரு ஆராய்ச்சி நூலை இயற்றி வெளியிட்டவரும், ஆங்கிலம் தமிழ் இரண்டு மொழிகளிலும் விற்பன்னரும், சென்னை கிறிஸ்தவக்கல்லூரியில் பல்லாண்டுகள் தமிழாசிரியராக இருந்தவருமாகிய ஸ்ரீமான் வா. மகாதேவ முதலியார் அவர்கள் ஐப்பசித் திங்கள் கச-ம் நாள் இறைவன் திருவடி நீழலை யடைந்தமை கேட்டு வருந்துகிறோம். அவருடைய குடும்பத்தவருக்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

## பிறநாட்டுச் செய்தி.

சீனக் குடியரசின் தலைவரான ஸ்ரீமாந் ட்ஸாகன் தமது பதவியை ராஜிநாமா செய்துவிட்டார்.

* * *

கெனியாவில், தலைவரி கொடுக்க மறுத்து மற்றும் கச-இந்தியர்கள் சிறை சென்றிருக்கின்றனர்.

* * *

ருஷியாவிலுள்ள ஸோவியத் அரசாங்கத்தைப் பிரஞ்சு அரசாங்கம் ஒப்புக்கொண்டுவிட்டது.

* * *

அல்ஸ்டர் தேர்தல் பிரசாரத்திற்காக மற்றோரிடத்துக்கு, உத்தரவை மீறிச் சென்றமைக்காக டிவாலரா மீண்டும் கைது செய்யப் பெற்று பெல்பாஸ்டுக்குக் கொண்டு போகப்பட்டிருக்கிறார்.

* * *

லண்டன் ஏகாதிபத்தியப் பொருட் காட்சிக் கூட்டத்தில், திவான் பகதூர் டி. விஜயராகவாச்சாரியார், உகூ-கo-உச-ல் செய்த உபந்யாஸத்தின் சாரம் பின் வருமாறு :— "இந்தியாவின் எதிர்கால நிலை, ஆங்கிலருடன் ஒத்துழைப்பதனாலேயே சீர் திருந்துமென்றும், இதனை இந்தியாவில் நாம் பிரசாரம் செய்யப் போவதாகவும், இந்தியாவும் இங்கிலாந்தும் என்றும் பிரிந்திருத்தல் முடியாத காரியமென்றும், இரண்டும் ஒத்துழைப்பதனாலேயே இருதேசங்கட்கும் நன்மை ஏற்படுமென்றும் சொன்னார்.

---

### தேவை.

வருகிற டிஸம்பர்-மீ கடைசியில் பெல்காம் நகரில் கூடப்போகும் அகில இந்தியத்தேசீய சபைக்குத் தமிழ் நாட்டிலிருந்து விஜயஞ் செய்யும் பிரதிநிதிகளுக்குச் சமையல் சிற்றுண்டியும் உதவப் பெறப்பு ஏற்றுக்கொள்ளக்கூடியவர்கள் தேவை. இதுவிஷயமான எல்லா விபரங்களுக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

சு. வேங்கடராமன்.
மானேஜர்,
தமிழ்நாடு தேசிய சபைக் காரியாலயம்,
கண்டோன்மெண்டு,
திருச்சினாப்பள்ளி.

Bleed through



மாவென் செயும்! வினை தானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென் செயும்! கொடுங் கூற்றென்
செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னே வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்.

காரைக்குடி. ஐப்பசி௴ கக-உ

## யார் காரணர்?

நமது சமூகத்தில் இந்நாள் அனைவரும் வீண் செலவைப்பற்றியும் விலை கொடுத்தலைப்பற்றியும் பெரிதும் வருந்த படுகின்றனர். இவைபற்றி வருந்தாதார் ஏறக்குறைய எவரும் இலர் என்று இயம்பலாம் "இது வரைக் திருமணத்தில் எவரும இவ்வளவு செலவு செய்யவில்லை; இவர் மிக அதிகமாகச் செய்தார்" என்று தம்மை எல்லோரும் மதிக்க வேண்டுமென்று பெருபுழுக்கஞ் செய்யும் ஒருவரும் வீண் செலவுக்கு வருந்துகிறார்; இங்கெகிழத் திலை விலையாகப் பொருள்கொடுத்து ஆண் பெறுவோர் எய்தும் இடருக்கு அளவில்லை. விலை வாங்குவோருள்ளும் விவாகப் பெருஞ் செலவுக்கல்லவா விற்கவேண்டி நேருகிறதென்று விளம்புவோர் இருக்கின்றனர். எந்தப் பெரிய ஒன்றாயினும், சிறிய ஒன்றாயினும் "இம்" என்றால் ஏராளமாகப் பொருள் வேண்டும் என்னும் நிலையில் சமூகம் இருக்கின்றது. ஆகலின், இவைகளை எண்ணி வருந்துதல் எவர்க்கும் இயற்கை. எனவே, இற்றைநாட் சமூக நிலையை நோக்குவார் வருந்துதல் வியப்பன்று.

வருந்திப் பயனென்? வருந்தற்குரிய பொருள் கண்டு ஆவன செய்தலன்றோ அறிஞர்க்கழகு. எவற்றால் இன்னல் நேர்கின்றனவோ அவற்றை யொழித்தால் யாவும் செம்மையாகிவிடும். இன்று சமூகம் ஏன் இடர்ப்படுகின்றது? வீண் செலவால்—விலைக்குப்பெண் பெறுவதால், என்று வைத்துக் கொள்வோம்; வீண் செலவை ஒழித்தால்—விலைக்குப் பெண்பெறுவதை நிறுத்தினால் இடர் தொலைந்துபோம்.

வீண் செலவுக்கு யார் காரணர்? அச்செலவு செய்வோர். விற்பனைக்கு யார் காரணர்? கொள்வோரும் கொடுப்போரும். இவர்கள் யார்? சமூக மக்கள். இவற்றால் நேரும் துன்பங்கட்கு வருந்துவோர் யார்? இவர்களே.

செய்வதும் இவர்கள்; செயற்குத் துன்புறுவதும் இவர்கள். தாங்களே ஒன்றைச் செய்தலாகாது என்று செப்புவர்; அதனைத் தாங்களே செய்வதா? இது சிறிதும் பொருத்தமற்றது. செய்தலை நிறுத்தவேண்டும்; அன்றிக் கூட்டங்கூடும் இடங்களில் "அடடா! என்ன அநியாயமாக விருக்கிறது" என்று கூறுவதை நிறுத்த வேண்டும். இரண்டும் புரிவது ஏற்காது என்பதை எவரும் மறுக்கமாட்டார்.

பெண்ணுக்கு விலை எவரும் கொடுப்பதில்லையென்றால் வாங்குவோர் என் செய்வர்? எப்படியும் ஒருவனுக்குக் கொடுத்தே தீரவேண்டுமேயன்றி வேறு வழியில்லை யென்பது தேற்றம். போட்டியாக ஒருவரறியாமல் மற்றொருவர் முந்துவதாற்றான் விலை பெருகுகிறது. அது யாவது இருக்கட்டும், "எல்லோரும் விலை கொடுப்பதில்லை யென்றிருந்தாலல்லவா சரிப்படும்; ஒருவர் கொடுப்பதில்லை யென்றால் மற்றொருவர் கொடுத்துவிடுகிறார்; ஆகலின், சும்மா விருப்பவர் என்றும் சும்மா விருக்க வேண்டுவதுதான்" என்று சருதலாம். ஆனால், இது நமக்கு உடன்பாடன்று. கூடாது என்கிற எது கருதியும் செய்தலாகாது. எல்லோரும் ஒன்றுகூடி விலை கொடுத்தலை யொழித்தல் என்னாள் ஆமென்று நம்பால் நிச்சயிக்கக்கூடவில்லை. ஒழிநாள் புலவுங்டு. எனினும் ஒரு செம்மை நேரிச் செல்லாம். அது நிற்க,

வீண் செலவை ஒழிப்பதில் தடையென்ன? அதற்கு எவர் வேண்டுமென்பது நமக்கு விளங்கவில்லை. அது சரியா தவறு என்பதைப்பற்றி ஈண்டு ஆராய்தல் வேண்டாம், "அது கூடாது; அதனால் துன்பம் மிகுதியாகவிருக்கிறது" என்ற எண்ணம் ஏறக்குறைய எல்லோர் மனத்திலும் பதிந்துகிடக்கிறது. எனவே, அது தவறு என்று ஈண்டு விரிக்க வேண்டுவதின்று. அதனைப் போக்க ஏன் முந்துகின்றாரில்லை? போக்க முந்தாது தவறு தவறு என்று சொல்லிக்கொண்டிருப்பது தக்கப் பொருள் சிறிதுமின்று என்று பன்முறை வற்புறுத்திக் கூறுவோம். இது பிறரால் ஆக வேண்டிய ஒன்றல்ல. இதனை நிறுத்த வேறு எவரும் வேண்டுவதில்லை. எவர் செய்கின்றாரோ அவரே நிறுத்த வேண்டியவர்; நிறுத்தும் அதிகாரம் அவருக்கு உண்டு. ஆகவே வீண் செலவு விஷயத்தில் பிறரெவரையும் குறை சொல்தல் உண்மைக்கு விரோதம். "நான் என்ன செய்வேன்" என்று பிடிகை போட்டுக்கொண்டு தொடங்குகின்ற போலிக்காரணங்களெல்லாம் அரங்கேறு.

எனவே சமூகத்தை இடர்ப்படுத்துவதாக எல்லோரும் எண்ணுகின்ற வீண் செலவுக்கு யார் காரணர்? செய்வோரே. ஆகலால் செய்வோர் பேச்சை விடுத்துச் செயலிற்குவருவாராக! வீண்செலவொழிந்து சமூகம் நலனடையும்.



## இடமாற்றம்.

இடமாற்றம்

சென்ற கிழமை ஊழியனில் குறித்தவாறு நமது அச்சுக்கூடமும் பத்திரிகாலயமும் இடம் மாற்றல் பெற்று இக்கல் கல்லுக்கட்டி வடகரையில் இருந்து வருகின்றன இவ்வாரத்திலேயே எல்லாச் சாமான்களையுங்கொணர்ந்து சேர்த்து இவ்வாரப் பத்திரிகையையும் வெளியிடுதல் பெரிய சிரமமான காரியமென்பது எல்லோருமறிந்ததே. ஏதேனும் பொருத்தமற்ற காரணங்கள் சொல்லிப் பொருள் மிச்சம் கருதிப் பத்திரிகை நிறுத்தும் இக்காலத்தில், அதிகமான சாமான்கள்கொண்ட பெரிய அச்சுக்கூடப் பொருள்களையெல்லாம் இராப்பகலாகச் சிரமப்பட்டுக் கொண்டுசேர்த்து ஒழுங்குபடுத்திப் பத்திரிகையையும் வெளிப் படுத்தியமைக்கு நமது சந்தாதாரராகிய அன்பர்கள் மகிழ்ச்சியடைவரென்பதிற் சந்தேகமில்லை எப்பொழுதுமே திங்கள் செவ்வாய் ஆகிய இரண்டு நாட்களினுள் ஒன்றுதவிர வேறு நாளன்றி நமது பத்திரிகை கிடைப்பது வழக்கமில்லை யென்பது அன்பர் களறிந்ததே செவ்வாய்க்கிழமை ஓய்வாக விருந்தபொழுதும் திங்கட்கிழமை இரவே வெளியிட்டிருக்கின்றோம் இவ்வாரத்தினுள் வழக்கம் போலப் பன்னிரண்டு பக்கங்களே வெளியிடுவதாக விருந்தோமெனினும், இன்னும் பெரிய இயந்திரம் பூட்டி முடியவில்லை ஆதலின், எட்டுப்பக்கங்களோடுவெளியிடுகின்றோம். இனி நமது அச்சுக்கூடம் பத்திரிகாலயத்திற்கு வரும் அன்பர்கள் கல்லுக்கட்டி ஊருணி வடகரையிலுள்ள ௩௬ எண்ணுள்ள கட்டிடத்திற்கு வரும்படி வேண்டப்படுகிறார்கள்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0-ரு-0 |
| இரகுன் உண்டியல்வட்டம் | க-௪-0 |

### விருந்துபசாரம்.

தேவகோட்டையிலிருந்து விருதநகருக்கு மாற்றப்பட்டிருக்கும் டிப்டி கலெக்டர் மகா-ள-ஸ்ரீ டி மாணிக்கம்பிள்ளை, பி. ஏ, அவர்களின் கௌரவார்த்தமாக, கிழமை நவம்பர்௴ ௨ஞாயிற்றுக்கிழமை, மாலை ௪-மணிக்கு, இவ்வூர் மீனாட்சி சுந்தரேச வித்யாசாலையில் ஒரு சிற்றுண்டி விருந்து நடைபெற்றது அயலூர் உள்ளூரார்களாக சுமார் ௧௫௦ பேர்களவந்திருந்தனர். ஸ்ரீமான் பிள்ளையவர்கட்கு உபசாரமும் படிக்கக் கொடுத்தார்கள். ஸ்ரீமான் பிள்ளையவர்கள், ஸ்ரீ மீனா-சி பெண் பாடசாலைக்கும் சென்று ஆடல் பாடல் கேளிக்கைகளைக்கண்டு மகிழ்ந்தார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### சூரசம்மாரத் திருவிழா.

நகரச் சிவன்கோவிலில், சூரசங்காரத் திருவிழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. நிகழும் ஐப்பசித் திங்கள் ௧௪-ம் நாளன்று சூரசங்காரமும் மறுநாளாகிய மேற்படி திருக்கல்யாண உத்ஸவமும் நடந்தேறியது.

### தேவகோட்டை

(நமது நிருபரிடமிருந்து)

தலூக ஸ்தாபன சபை:— இச்சபையின் முதலாவது கூட்டம் இம்மாதம் பதின்மூன்றாம் நாள் திரு. மாணிக்கம் பிள்ளை தலைமையின்கீழ்க்கூடியது. தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் ௧௬ பேரும் நியமன அங்கத்தினர் நால்வரும் வந்திருந்தனர். அரச விச்வாஸப் பிரமாணம் செய்யும்படி தலைவர் சொல்ல ஆங்கிலத்திலும் தமிழிலும்நகல்கள் அங்கத்தினர்கட்கு வழங்கப்பட்டன. திருவாளர்களான-ந்தரமய்யர் (வக்கீல்)சேஷய்யர் (வக்கீல்), காளைராஜா அ. மு, முருகப்ப செட்டியார் (ராவ் பகதூர்) முதலிய நால்வரும் ஆங்கிலத்தில் பிரமாணஞ் செய்தார்கள். மற்றவர்கள் தமிழிலேயே செய்தார்கள். பிறகு ஜில்லா ஸ்தாபன சபைக்கு ஐந்து அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்க, தேர்தல் நடந்தது. அதில் திருவாளர்களான சித. நா. ராம. நாராயணன் செட்டியார் (காரைக்குடி), ராவ்பகதூர் அ. மு. முருகப்ப செட்டியார் (பள்ளத்தூர்), ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் (காரைக்குடி), அரு. ராம. அரு. காளை ராஜா செட்டியார் (தேவகோட்டை), சுந்தரமய்ய வக்கீல் (தேவகோட்டை) முதலிய ஐவரும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அரசாங்க உத்யோகஸ்தர் மாணிக்கம் அவர்கள் விருதுபட்டிக்கு மாற்றப்பட்டுவிட்டதால் தற்கால ஏற்பாடாகத்திருவாளர் வக்கீல் சுந்தரமய்யரிடம் (தேவகோட்டை) தாலூகா ஸ்தாபன சபைத் தலைமைப் பதவியை ஒப்புவித்தார். உக-வயது நிறையப் பெறாத திருவாளர் காளை ராஜா செட்டியார் தாலூகா ஸ்தாபனத்தில் நியமனம் செய்யப்பட்டும் ஜில்லா ஸ்தாபனத்துக்கு தேர்ந்தெடுக்கப்பட்டுமிருப்பது லோகல் போர்டு சட்டத்துக்கு முரணானது என்பதை ஜில்லா ஸ்தாபனத் தலைவரான கனம் ராஜா அறியவில்லையெனவே எண்ண வேண்டியதிருக்கிறது. நியமனம் செய்யப்படவேண்டிய இன்னொரு அங்கத்தினர் ஜில்லா ஸ்தாபன சபைத் தலைவரால் இன்னும் நியமிக்கப்படாதது ஆச்சரியமாகவே இருக்கிறது.

## தந்திச் செய்தி.

பினங்கு ஐப்பசி௴ கஉ

| | |
|---|---|
| சென்னை உண்டியல்விலை | நூற்று ஐம்பத்தைந்து |
| ரயம்விலை | நூற்று முப்பது |
| ரப்பர் விலை | எண்பத்தாறு |

சென்னை ஐப்பசி௴ கஅஉ

| | |
|---|---|
| பவுன் விலை | க௪-கக-0 |
| வெள்ளி ரூபாயெடை | 0-கடு-0 |

### வங்காள அடக்குமுறை.

அடிகள் கூற்றின் ஸாரம்,—

இராஜப் பிரதிநிதியின் வெடிகுண்டு வருமென்று இங்கிலாந்துப் பத்திரிகைகள் ரூசிப்பித்திருந்தன. எதிர்பார்த்தது நேர்ந்துவிட்டது.

இந்தியர்களின் க்ஷேமலாபங்களும் ஆங்கிலர் நன்மைகளும் பூரணப்பட்டுக் கிடக்கும் வரையில் அராஜகக் குற்றங்களைப் பற்றிய பயம் ஒழியாது

இந்தியாவின் பொருளாதார அபிவிருத்திக்கு லங்காஷயர் இயந்திரங்கள் பெரும் இடைஞ்சல்கள். லங்காஷயரிலிருந்து ஒரு கஜம் துணிகூட வாங்காமலிருப்பது இந்தியாவுக்கு நன்மை பயக்கும்.

தன்னைத்தான் பாதுகாத்துக் கொள்ள ஏற்பாடு செய்வது இந்தியாவுக்கு நன்மை. பாதுகாப்புக்குப் பிறரை நம்பியிருப்பது நமது ஆண்மையில் முக்காற்பங்கை இழந்துவிடுவதாகும்.

பலாத்காரச் செயல் புரிவோர் தண்டிக்கபடுவதில் எனக்குப் பூரணசம்மதம். அராஜகத்தினால் தேசத்துக்கு எத்தகைய நலனும் உண்டாகாது.

உண்மையில் குற்றம் செய்தவர்களையல்லது குற்றம் செய்ய முயன்றவர்களைத் தண்டிப்பது ஒரு விஷயம்; எச்சரிக்கையில்லாமல் சந்தேகத்தின்மீது கைது செய்ய அதிகாரிகட்கு யதேச்சாதிகாரம் கொடுப்பது முற்றிலும் வேறான விஷயம்.

அரசாங்கத்தார் பீதியுற்றுவேலை செய்யும்போதெல்லாம் குற்றம் செய்தவர்களைவிடக் குற்றமற்றவர்களே அதிகமாகத் தண்டிக்கப்படுகிறார்களென்பதை அநுபவத்தில் தெரிந்துகொண்டிருக்கிறோம்.

ஒரு சில மனிதர் கத்தி துப்பாக்கி விசேஷச் சட்டங்களின் துணை இவைகளை வைத்துக் கொண்டு கோடிக்கான ஜனங்களிடையே உயிர் வாழ்ந்திருப்பது அநாகரிகமாகும்.

## நOவது தமிழ் மாகாண நாட்டு உபசரணைக் கூட்டக் காரியதரிசியின் அறிக்கை.

நூ—கO—உசஉ கூடின உபசரணைக்கழகத்தின் விஷயாலோசனைக் கூட்டத்தில், மகாநாட்டுத் தீர்மானங்களைத் தயாரிக்க ஸ்ரீமான்கள் வி என். அரங்கசாமி ஐயங்கார், என். கே. ஸ்ரீனிவாசராகவன், என். அண்ணாமலைப் பிள்ளை, ரெ. சித்தாசெட்டியார், முதலியோர்களடங்கிய கூட்டம் ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறது ஷை கூட்டத்தார் கO—கக—கஆஉச-க்குள் மகாநாட்டுத் தீர்மான நகல் ஒன்று, காரியாலயத்தில் ஒப்புக்கொடுக்க வேண்டும். ஆதலால் தங்கள் ஜில்லாவிலிருந்து அனுப்பக் கூடிய தீர்மானங்களை ஷை தேதிக்கு முன்னரே ஸ்ரீமான் வி. என் அரங்கசாமி அய்யங்கார், கஸ்தூரி கோதயம், ஆரணி என்ற விலாசத்திற்கு அனுப்பவேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பி. ஆர். இராமானுஜலு,
காரியதரிசி.

## புதுப்பாளையம். பஞ்சுகோட்டிப்பள்ளிக்கூடம்.

இப்பொழுது சேலம் ஜில்லாவைச் சேர்ந்த புதுப்பாளையத்தில் கதர்க் கழகத்தாரால் நடத்தப்பட்டு வரும் பஞ்சு கொட்டிப் பள்ளிக்கூடத்தை அடுத்த மாதம் முதல் வட ஆற்காடு ஜில்லாவில் நடத்துவதாகக் கழகத்தார் தீர்மானித்திருக்கின்றனர். எந்த ஊரில் எந்தத்தேதியில் இப்பள்ளிக்கூடம் திறக்கப்படு மென்பது கூடிய சீக்கிரத்தில் பத்திரிகை மூலமாய்த் தெரிவிக்கப்படும். கைராட்டையில் நூல் நூற்பதற்கு வேண்டிய சகல விஷயங்களும் இப்பள்ளியில் இலவசமாய்க் கற்றுக் கொடுக்கப்படும். மகாத்மாவின் விருப்பப்படி எல்லோரும் நூற்கவேண்டுமானால், ஒவ்வொருவரும் பஞ்சு கொட்டக் கற்றுக் கொள்ளவேண்டியது அத்தியாவசியமாகும். ஆகையால் வட ஆற்காடு ஜில்லா வாசிகளும் மற்றவர்களும் இப்பள்ளிக்கூடத்தில் சேர்ந்து பஞ்சகொட்டக் கற்றுக் கொள்ள முன் வரவேணுமாகக் கோரப்படுகிறது. இப்பள்ளியில் சேரும் மாணவர்களுக்கு சாப்பாடும் இலவசமாய்ப் போடப்படும்.

காரியதரிசி.

## கொழும்பு இந்திய வாலிப சங்க அறிக்கை.

இவ்வாண்டுத் தீபாவளிப் பண்டிகைக்கு முன்னரே நமது சங்கத்தாரால் கதராடை தரிக்க வேண்டுவதன் அவசியத்தைப்பற்றி பிரசாரமும் வெளியீடுகளும்செய்ததோடு சென்னை "சுயராஜ்யா" பத்திரிகையின் ஆசிரியர் திருமிகு டி. பிரகாசம் அவர்களாலும் மேற்படி பத்திரிகையின் காரியக்காரர் திருமிகு. வெங்கட்டராமய்ய ரவர்களாலும் "கதரே சுயராஜ்யம்" என்பதுபற்றி ஜிந்தும்பிட்டி நடனசாலையில் சொற்பொழிவுகளும் நிகழ்த்துமாறு செய்தார்கள். முக்கியமாக நமது சங்கத்தலைவர் திருமிகு வ. ராம. வ. சு. இலக்குமணச் செட்டியாரவர்கள் அவர்களையொத்த நகரவைசிய முதலாளிகளுக்குக் கதரின் சிறப்பை அறிவுறுத்த, மெல்லியதான உடைதரிக்க வந்த பெரியார்களும் தீபாவளியன்று கதர் உடுத்தியதே சிறப்புடைத்து.

மேற்கண்டவைகளின் பயனாக நமது வணிகத் தெருமக்கள் நூற்றுக்கு தொண்ணூற்றுவர் கதர் தரித்திருந்தார்கள். அபிமானமிருப்பினும் முரட்டுத் துணியைக் கட்ட நாணிக் கோவிலுக்கு வரும் பொழுதுமட்டும் ஒரு சிலர் கதரணிந்து பின்னர் வேறு அணிந்து கொண்டார்கள். இத்தகையாரை எப்பொழுதும் கதரே உடுத்தி வரும்படி மிக வேண்டுகின்றோம்.

புடவை வியாபாரிகளில் சிலர் மில் துணிகளையும் மேலப்பாளையம் துணிகளையும் கதரெனவுமாற்றியும் தீபாவளி அடுத்து வரவர விலைகளை ஏற்றியும் விற்றனர். சில வியாபாரிகள் திருப்பூர் தேசிய சபைமூலம் கொஞ்சம் வருவித்து விற்றனர். இவைகள் மிகவும் அன்போடுவாங்கப்பட்டன எனினும், அதற்கும் விலையை அதிகமாய்க் கூட்டிவிட்டனர்.

உண்மைத் தேசாபிமானிகள் சுத்தமான கதர் வரவழைத்து விற்பின் நந்தேயத்துக்கும் நம்பெரியராம் காந்தியடிகளுக்கும் கைம்மாறு செய்தவர்களாவார்கள்.

தீபாவளியன்று நகரத்தார் புதுக்கதிர் வேலாயுத சுவாமி கோவிலில் சங்கத்தின் கூட்டமொன்று சங்கத்தின் ஆசிரியர் திருவாளர் ப. இராமனுதப்பிள்ளையவர்கள் தலைமையில் கூடியது. தலைவர் திருமிகு வ. ராம. வ. அ. இலக்குமணச் செட்டியாரவர்கள் கிதருடுத்தியவர்களுக்கு நன்றி கூறி, திருநீறு ருத்திராக்கத்தின் மகிமை விளங்க மூர்த்தி நாயனுர் சரித்திரத்தையும் கூறினார்கள். பின்னர் திருமிகு. சின்னையா சாஸ்திரியாரவர்கள் தமிழும் சைவமும் என்பது பற்றி அரியசொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

அமைச்சன்,

சோம. சுப்பிரமணியன்.

## கூனூர்.

குன்னூர் சு. மூரு. ஷண்முகஞ் செட்டியார் கடைக்குத் தற்பொழுது காரியஸ்தராகவுள்ளவரும், நீலகிரியில் பிரபல பீர்க்கடைக் குத்தகைதாரருமான கி ராமன் செட்டியார், சுமார்ஒருவாரத்துக்கு முன்பு ஜம்புலிங்க ஆசாரி என்பவனைத் தஞ்சாவூருக்கு அனுப்பி, ஷண்முகஞ்செட்டியார் வகையறாவுக்குத் தஞ்சாவூரிலிருந்து, ஷண்முகம் செட்டியார் இரங்கூனுக்குத் தந்தி பதினாயிர ரூபாவுர்குக் கொடுத்ததுபோலக் கொடுக்கச் செய்யவே, பிறகு இரங்கூன்காரர் சில இடங்கட்குத் தெரிவிக்கப் பொய்த்தந்தி யென்பதாகவும் சதியாலோசனை யென்பதாகவுந் தெரியவந்ததின்பேரில், ஷை ஜம்புலிங்க ஆசாரி யென்பவனைத் தஞ்சாவூரில் போலீசார் காவலில் வைத்து வேண்டிய வாக்குமூலங்களை யெல்லாம் வாங்கிப் போயிருக்கிறார்கள். இவரைக் காவலில்பிடித்துவைக்கத் தஞ்சாவூரிலிருந்து வரும் உத்தரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். பீர்க்கடை வியாபார முறைக்கு எவ்வளவு நேர்வழிகளை யெல்லாம் தெரியச் செய்திருக்கின்றதென்பதைப் பாருங்கள். எல்லாம் காலத்துக்குத் தக்க கோலமாக ஆய்விட்டது.

சுமார் கஉ-வருஷங்களுக்கு முன்பு களவாடப்பட்டதும் அOO-ரூபா விலை பெறக்கூடியதும், அரசாங்கப் பொருளுமான சர்வேயர் தூரதிருஷ்டிக் கண்ணாடிப் பெட்டி ஒன்றை, இவ்விடம் ஊர்க் காவற் கூட்டத்தார் (போலீஸார்) கி. ராமன் செட்டியாரின் அறையைப் பரிசோதனைபோட்டுச் சில தினங்கட்கு முன்பு கண்டு பிடித் தெடுத்திருக்கிறார்கள். ஷை சம்பந்தமான விசாரணை பிறகு துவக்கப்பெறும்.

என். இராமசாமிபிள்ளை
கூனூர்.







## இராமனாட் சப்கோட்டு.

இராமனாட் அடிஷனல் சப்கோர்ட்டு.

கஆகO-வரு ஓ. எஸ். நிர். கருஅ.

கஆஉந-வரு இ. பி. நிர். சஅ

கஆஉச.வரு இ. ஏ. நிர். கஆஅ.

| | |
|---|---|
| அள. அரு. ராம. அருணாசலம் செட்டியார் | வாதி ரிவீவர். |
| லெட்சுமணன்செட்டியார் வகையரு | பிரதிவாதிகள். |

### நோட்டீஸ்

ஷை நிம்பர் வாதிக்கு ஷை நெம்பர் பிரதிவாதிகளிடமிருந்து கிடைக்க வேண்டியடிக்கிரிபாக்கித்தொகைக்காக நிறைவேற்றி ஷை பிரதிவாதிகளுக்கு பாத்தியமான தொகை ரூ. எOOOO இரணியூர் கோவிலில் ஷை கோவில் டிரஸ்டிகளிடம் இருப்பதில் இந்த கோர்ட்டு மூலம் ஏலம் போட்டு வசூலிக்க வேண்டுமென்று மனுக் கொடுத்து அந்தப் பிரகாரம் ஆர்டராயிருப்பதால் ஷை நிம்பர் பிரதிவாதிகளுக்கு ஷை கோவிலிருந்து கிடைக்க வேண்டிய கடனை இராமனாதபுரம் சப்-கோர்ட்டார் அவர்கள்முன்னிலையில்பகிரங்கமாய் கஆஉச வரு டிசம்பர்-மீ கஉ ஏலம் போடப்படும் அதை வாங்க இஷ்டப்படுகிறவர்கள் ஷை கோர்ட்டு முன்பாக ஷை தேதியில் பகல்கக-மணிக்கு ஆஜராகி ஏலத்தில் கேட்டு எடுத்து வசூலித்துக் கொள்ளலாம்.

ஸி. ஸ்ரீனிவாசராவ் சாகிப்,
வாதி வக்கீல்.

கஅ—கO—உச


### தனவைசிய ஊழியன் சந்தா விபரம்.

| | |
|---|---|
| உள்நாட்டிற்கு வருஷ சந்தா | ரூ. ரு 0 0 |
| வெளி நாட்டிற்கு ஷை | சா 0 0 |
| தனிப்பிரதி க-க்கு | 0 உ 0 |

### விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| மாதம் க-க்கு பத்தி க-க்கு | ரூ உO | ஒருபக்கம் விளம்பரம் செய்ய | |
| ஷை பத்தி அரைக்கு | ரூ கக | ஒரு மாதத்திற்கு | ரூ ௩O |
| ஷை கால் பத்திக்கு | ரூ சா | ஷை ஒரு வாரத்திற்கு | ரூ கரு |
| ஷை அங்குலம் க-க்கு | ரூ உ | | |

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோருக்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. கஎ- ஆகவும், அரைப்பத்திக்கு ரூ. கூ-ஆகவும், கால்பத்திக்கு ரூ. ரு-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதிற்கதிகமாகவும் விளம்பரம் செய்வோருக்கு மாதம் ஒன்றுக்கு பத்தி க-க்கு ரூ. கரு-வீதமும், அரைப்பத்திக்கு ரூ. அ-வீதமும், கால் பத்திக்கு ரூ. ச-வீதமும் போடப்படும்.

காரியஸ்தர், "தனவைசிய ஊழியன்" காரைக்குடி.

# விளம்பரம்.



ஸ்ரீ சம்பக லக்ஷ்மி ஹால்

## சி. கே. உச்சப்பா, ஹநுமந்தப்பா

ஜரிகை, பட்டு புடவை வியாபாரிகள்

பெங்களூர். (பிராஞ்சு) காரைக்குடி.



நாங்கள் கரு, ௨௦ வருஷங்களாக தனவைசிய நாட்டில் பட்டுக் கண்டாங்கிகள் முதலானவைகள் வியாபாரம் செய்து வெகு நாணயமாகவும் உத்திரவாதத்துடனும் தொழில் நடத்திவருவது அனைவரும் அறிந்ததே. இப்பொழுது இந்நாட்டவர்களின் சௌகர்யத்தை அநுசரித்து சுலபமாய் நேரில் வந்து தேவையான ரகங்களைப் பார்த்து வாங்கிக் கொள்ளும் படியாக அநேக தனவைசியப் பிரமுகர்களின் அபிப்பிராயத்திற் கிணங்க இந்த காரைச்குடி நகரில் தேவகோட்டை ரோட்டில் மரு.சு. அவர்கள் புதிய கட்டிடத்தில் எங்கள் கடையின் பிராஞ்சு மேற்கண்டவிலாசத்தில் நாளிது ஆவணி-மீ ௬௨ யில் ஸ்தாபித்திருக்கிறோம்.

தனவைசியர்கள் அனைவரும் அவசியம் விஜயம் செய்து தேவைக்கு ஆர்டர் தருவதுடன் அயலூர்க்காரரான எங்களை வியாபாரத்தில் ஊக்கப்படுத்திவிடுமாறு வேண்டுகிறோம்.

சி. கே உச்சப்பா, ஹநுமந்தப்பா.

ராய. சொக்கலிங்கனுல் காரைக்குடி தனவைசியவூழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப்பிரசுரஞ் செய்யப்பெற்றது.

